REGD. NO. M.; 6311 2M. ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: ஆவணி 8உ சனி (24—8—57) ★ ★ வெளியூர்: ஆவணி 9உ ஞாயிறு (25—8—57) [இதழ் 61

## சேலத்தில் உருக்கு ஆலை ஏற்படுமா?

புதுடில்லி, ஆக. 24—

சேலத்தில் கிடைக்கும் இரும்புக் கனிப்பொருள், கல்கத்தா கனிப்பொருள் ஆராய்ச்சிக் கூடத்தில் பூர்வாங்கப் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது என்றும், இப்பரிசோதனை இவ்வாண்டு இறுதிக்குள் முடிவடைந்துவிடுமென்றும் மக்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

இப்பரிசோதனை மிகவும் முக்கியமானது என்றும், சேலத்தில் உருக்குத் தொழிற்சாலை ஏற்படுவது இப்பரிசோதனையைப் பொறுத்துத்தான் இருக்கிறது என்றும் கூறப்பட்டிருக்கிறது.

# வடநாட்டு இந்தி வெறியர் மனப்போக்கு

## இந்தித் திணிப்புக் குழு உறுப்பினர் தெளிவாக்குகிறார்

### ஆரம்பக் கல்விக் கட்டத்திலேயே இந்தி கட்டாயபாடமாகவேண்டுமாம்

### இந்தி பேசுவோர் இதர மொழியைக் கற்கத் தேவை இல்லையாம்

### இந்தித் திணிப்புக்கு நாள் குறிக்க குழு தவறிவிட்டதாம்

*மகன்பாய் தேசாய் வெறிக்கூச்சல்*

அகமதாபாத், ஆக. 23—

வடநாட்டு இந்தி வெறியர்களின் மனப்போக்கு எப்படிப்பட்டது என்பதை, இந்தித் திணிப்புக் குழுவில் இடம் பெற்றிருந்த மகன்பாய் தேசாய் என்பாரின் கருத்திலிருந்து தெரிந்துகொள்ள முடிகிறது.

இவர், இந்தித் திணிப்புக் குழுவின் அறிக்கைக்கு ஒரு கருத்து வேறுபாட்டுக் குறிப்பு எழுதி, இந்தித் திணிப்பைத் தீவிரப்படுத்தவில்லை எனக் கோபப்பட்டுக் கொண்டவராவார்.

இவர் தனது கருத்தை விளக்கிப் பத்திரிகையாளரிடம் பேசுகையில், இந்தித் திணிப்புக்குத் திட்டவட்டமான வழிமுறைகளையும், கால நிர்ணயத்தையும் தராததினால், இந்தித் திணிப்புக் குழுவிற்கு எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை; குழு வெற்றி பெறவில்லை' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள், வேறொரு இந்திய மொழியைக் கட்டாயமாகக் கற்க வேண்டும் என்ற கருத்து தனக்கு உடன்பாடானதே என்று கூறியுள்ள அவர் மேலும் குறிப்பிட்டதாவது:—

"ஆரம்பக் கல்விக் கட்ட நிலையிலேயே இந்தியைக் கட்டாயமாகக் கற்றுக்கொள்ளுமாறு நிர்ப்பந்திக்க, அரசியல் சட்டத்தைத் திருத்தியேனும் மத்திய சர்க்கார், அதிகாரம் பெறவேண்டும். மேலும், இந்தி பேசுபவர்கள், மற்றொரு இந்தியமொழியைக் கற்க வேண்டும் என்று நான் தெரிவித்திருக்கிறேன்.

"ஆங்கிலத்தைப் பொறுத்த ஒரு பிற்போக்கான சூழ்நிலையை ஒழிப்பதற்கும், ஆட்சிமொழிப் பிரசினைக்குப் பரிகாரம் தேடும் விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் தேக்கநிலையை நீக்குவதற்கும் கமிஷன், திட்டவட்டமான வழிமுறைகளைச் சிபாரிசு செய்திருக்க வேண்டும்; அவ்வாறு செய்யாததின் மூலம் கமிஷன், இந்தத் துறையில் தேவையான வெற்றியைப் பெறவில்லை.

"இந்தி மொழிதான், இந்தியாவின் 'பொது மொழி' என்பதால், தாங்கள் வேறெந்த இந்திய மொழியையும் கற்றுக்கொள்ளத் தேவை இல்லை என்று இந்தி பேசும் பகுதி மக்கள் கருதுகிறார்கள்—நம்புகிறார்கள்.

"இந்த நம்பிக்கையின் தெளிவான எடுத்துக்காட்டுதான், பஞ்சாபில் நடைபெறும், இந்தி பாதுகாப்புக் கிளர்ச்சியாகும்.

"இந்த விஷயத்திலும் கமிஷன் தனது திட்டமான கருத்தை அறிவித்திருக்க வேண்டும்.

"1965-க்குள் ஆங்கிலத்தை ஒழித்துவிட்டு இந்தியை இடம் பெறச் செய்வது பற்றி கமிஷன், நாள் குறிக்காமல்விட்டிருப்பதையும் நான், எனது தனிக்குறிப்பில் சுட்டிக்காட்டியிருக்கிறேன்; கமிஷனின் வேலையும் இதுதான். இதற்குத்தான் கமிஷன் நியமிக்கப்பட்டது.

"மேலும் கமிஷன், நிர்வாக இயந்திரம் முழுவதையும், ஆங்கிலத்திற்குப் பதில் இந்திமயமாக்குவது பற்றியும் கவனம் செலுத்தவில்லை."

## மாமியார் அரசியல்!

"திரு. அண்ணாதுரை, 'நாங்கள் சட்டசபையில் லாவணி பாட மாட்டோம்; லாலி பாடத்தான் போகிறோம்' என்று கூறியது ஒன்றே போதும்."

—'அகில இந்தியத் தலைவர்' பி. இராமமூர்த்தி; புதுவை: 19—8—57

★

"காங்கிரஸ் எம். எல். ஏ.-க்களும், தி. மு. க. எம். எல். ஏ.-க்களும் அடுக்குமொழியில் வாய்ச்சண்டை போட்டுக்கொண்டு இருக்கிறார்கள்."

—'தமிழகத் தலைவர்' ப. ஜீவானந்தம்; மணப்பாறை: 17-8-57

★

"நாங்கள் இங்கு வந்திருப்பது ஆளும் கட்சிக்கு 'லாலி' பாடுவதற்காக அல்ல; குற்றங்களை எடுத்துக் கூறவேதான் வந்திருக்கிறோம். அதுதான் ஜனநாயகத்தின் பொறுப்பு."

—வரவு-செலவுத் திட்ட விவாதத்தில் அண்ணா 4—7—57

## நீதிமன்றத் தீர்ப்புகள்

### முதலாளிகள் துரிதமாக அமுல் செய்வதில்லையாம்!

### மக்கள் சபையில் வெட்கமின்றி ஒப்புகிறார் அமைச்சர்

புதுடில்லி, ஆக. 23—

பல துறைகளிலும் உள்ள தொழிலாளருக்கான சட்டங்கள் அமுல் செய்யப்படும் விதம் குறித்து ஆராய்ந்தறிவதற்காக தொழிலாளர் இலாகாவில ஒரு தனிப் பிரிவு அமைக்கப்போவதாக மந்திரி நந்தா மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

தொழிலாளர் இலாகா மானியக் கோரிக்கை விவாதத்திற்குப் பதிலளிக்கையில் அவர், 'அந்தப் பிரிவு விரைவிலேயே துவங்கப்படும்' என்றும் கூறியிருக்கிறார்.

"கடைசி ஆயுதம் என்ற நிலை ஏற்பட்டாலன்றி வேலை நிறுத்தத்தில் ஈடுபடவேண்டாம் எனத் தொழிலாளரை நாம் கேட்பது போலவே, கடைசி ஆயுதமாக மட்டுமே நீதிமன்றங்களுக்குச் செல்ல வேண்டுமென முதலாளிகளையும் நாம் கேட்கத் திட்டமிட்டிருக்கிறேன்" என்றும் நந்தா கூறியிருக்கிறார்.

நீதிமன்றத் தீர்ப்புகளை அமுல் செய்யும் நிலைகள் திருப்திகரமாக இல்லை என்றும், பல தீர்ப்புகள் துரிதமாக அமுல் செய்யப்படுவது இல்லை என்றும் மந்திரி ஒப்புக்கொண்டிருக்கிறார்.

### அமுலுக்கு வருகிறது

சென்னை, ஆக. 23—

இரசாயன உரக்கட்டுப்பாடு செப்டம்பர் முதல் அமுலுக்கு வருகிறது.

## உறுப்பினர்கள் உபயோகமற்றவர் என்றால் மந்திரிகள்...?

### மக்கள் சபை உறுப்பினர்களைக் குறைகூறிய மந்திரிக்கு சபைத் தலைவர் கண்டனம்

புதுடில்லி, ஆக. 23—

மத்திய மந்திரி ஒருவர் மக்கள்சபையில் முறை தவறிப் பேசியதை, சபைத் தலைவர் வன்மையாகக் கண்டித்திருக்கிறார்.

சமுதாய நலத்திட்ட இலாகா மந்திரியான எஸ். கே. டே என்பார், கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில், மக்கள்சபை உறுப்பினர்களையும் சட்டசபை உறுப்பினர்களையும் குறைகூறும் வகையில் பேசியிருக்கிறார்.

"சமுதாய நலத் திட்டம் குறித்து மக்களிடை உற்சாகம் காணப்படாதது என்? சர்க்காரால் மக்களுக்கு உற்சாகமூட்ட முடியாமலிருப்பதற்குக் காரணம் என்ன?"

என்று, கேள்வியொன்று கேட்கப்பட்டது.

இதற்குப் பதிலளித்த அந்த மந்திரி, 'திட்டம் பற்றி மக்களிடை சர்க்காரால் உற்சாகமூட்ட முடியவில்லை என்பதை நான் ஏற்க முடியாது. மக்களைப் பொறுத்த வரையில், நான் அவர்களிடம் இருந்து எதிர்பார்ப்பது மிகச் சொற்பம்தான்; ஆனால், மக்களின் பிரதிநிதிதான் திட்டத்தில் பங்கு பெறவில்லை' என்று கூறினாராம்!

இது, பல உறுப்பினர்களிடமிருந்தும் கண்டனக் குரலை எழுப்பிற்று.

சபைத் தலைவர் அனந்தசயனம் அய்யங்கார் குறுக்கிட்டு, 'திட்டம் பற்றி மக்களுக்கு உற்சாகமூட்டுவதற்கு சர்க்காரால் முடிந்திருக்கிறதா என்பதுதான் கேள்வி. இதற்குப் பதிலளிக்கையில், மக்கள் சபை உறுப்பினர்மீது மந்திரி குற்றம் சுமத்த அவசியமே இல்லை. மந்திரிகள், மக்கள் சபையின் பிரதிநிதிகள்தாம். மக்கள்சபை உறுப்பினர்கள் உபயோகமற்றவர்கள் என்றால், மந்திரிகளைப் பற்றி என்ன சொல்லுவதென எனக்குத் தெரியவில்லை?' என்று கூறியிருக்கிறார்.

இது கேட்டு பலரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்திருக்கின்றனர்.

மந்திரி டே, 'நான் மிக வருந்துகிறேன்; நான் சொல்ல விரும்பியதெல்லாம், திட்டம், மக்கள் பிரதிநிதிகளின் ஒத்துழைப்பைப் பெறத் தவறிவிட்டது' என்பது தான் என்று கூறியிருக்கிறார்.

சபைத் தலைவர் மீண்டும் குறிப்பிட்டிருக்கிறார்—'மந்திரி, தனது முந்திய நிலையில் மாற்றம் எதுவும் தெரிவிக்கவில்லை. உறுப்பினர்கள், கேள்வி கேட்டு பதில் பெறுவதின் மூலம் மந்திரிகளுடன் ஒத்துழைக்கிறார்கள். மக்களின் கருத்தறிய வேண்டியது சர்க்காரின் கடமை. அல்லது சர்க்கார், மக்கள்சபை உறுப்பினர்களை மட்டுமேயா நம்பியிருக்கிறார்கள்?' என்று கேட்டுவிட்டு, 'மந்திரியின் பதில் வருந்தத்தக்கது என்றாலும், இந்த நிகழ்ச்சியைப் பதிவு செய்யாமல்விட வேண்டும் என்று நான் உத்தரவிடுவதற்கில்லை' என்று கூறியிருக்கிறார்.

புதுடில்லி, ஆக. 23—

இலண்டனிலுள்ள இந்தியத் தூதுவரின் அலுவலகத்தில் 11 கார்கள் இருக்கின்றனவாம். இவற்றின் பராமரிப்புச் செலவு மட்டும் 1956—57-ல் ரூ. 8,440 ஆயிற்றாம்! மக்கள் சபையில் பண்டித நேரு தந்த கணக்கு இது!

## கலைவாணர் உடல்நிலை

### சீர்பெற்று வருகிறது

சென்னை, ஆக. 23—

சென்னை மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவரும் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் அவர்களின் உடல்நிலை இப்பொழுது பெரிதும் குணமடைந்து வருகிறது.

நேற்று முன்தினம் அவரது உடலில் புதிய இரத்தம் செலுத்தப்பட்டது. இரத்தக் குறைவு காரணமாகவே இச்சிகிச்சை மேற்கொள்ளப்பட்டது.

## தென்னாட்டு என். ஜி. ஓ.-வினருக்கு டி. டி. கே. கைவிரிப்பு?

புதுடில்லி, ஆக. 23—

சென்னை, கேரளம், மைசூர், ஆந்திரம் ஆகிய நான்கு தென்னாட்டு மாநிலங்களின் சர்க்கார் ஊழியர் தூதுக்குழுவினர், இன்று இங்கு, மத்திய நிதிமந்திரி, டி. டி. கிருஷ்ணமாச்சாரியைச் சந்தித்தனர்.

இவர்களின் கோரிக்கை, மாநில சர்க்கார் கவனிக்கவேண்டிய ஒன்று என்றும், என்றாலும், இவர்களுக்கு தன்னால் எவ்வளவு தூரம் உதவமுடியும் என்பதைத் தான் அறிய முயற்சிப்பதாகவும் டி. டி. கே. கூறியதாகத் தெரியவருகிறது.

நம் நாடு
தி.மு.க. தினஇதழ் ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்
சென்னை 24—8—57 சனி

# நிறவேற்றுமை ஒழிக!

உலகத்திற்கெல்லாம் நாகரீகத்தைப் போதிக்கின்றது அமெரிக்கா. நாகரீக வாழ்க்கைக்கே தான்தான் முன்னேடி என்றும் அமெரிக்கா பீத்திக் கொண்டுவருகிறது.

விஞ்ஞானத் துறையில் தனக்கு நிகர் தானே என்று சொல்லிக் கொள்ளுகின்றது அமெரிக்கா. தொழில் துறையில் தன்னை மிஞ்சக்கூடிய நாடு வேறு எதுவும் அவனியில் இல்லை என்று பீத்திக்கொண்டு வருகின்றது அமெரிக்கா.

உலக அமைதிக்காகப் பாடு படுவதில் தன்னை மீறக்கூடிய நாடு உலகில் கிடையாது எனத் தம்பட்டம் அடித்துக்கொண்டு வருகிறது அமெரிக்கா. அமைதி காப்பதற்கான வழிவகைகளையும் அடிக்கடி வழங்கியும் வருகின்றது அமெரிக்கா.

தொழில் துறையில் பின் தங்கிக் கிடக்கின்ற நாடுகளிடத்திலும், அதன் மக்களிடத்திலும் அதிகமான பரிவுகாட்டி வருகின்றது அமெரிக்கா, அது போன்ற நாகரீகத்தில் மிகக் குறைந்து இருப்பதாகக் கருதப்படும் மக்களைக் கைதூக்கி விடுவதில் தீவிரமும் காட்டி வருகிறது அமெரிக்கா.

நாகரீக ஏணியின் உச்சத்தில் இருக்கின்றது அமெரிக்கா என்பதில் எவருக்கும் ஐயமிருக்க முடியாது. தொழில் துறையில் மிக மிக உன்னத நிலையில் இருந்துவருகிறது அமெரிக்கா என்பதிலும் எவருக்கும் சந்தேகமிருக்க முடியாது.

ஆனால் உலகத்திற்கெல்லாம் நாகரீகத்தையும், தொழில்துறை அறிவையும், விஞ்ஞானப் பேருதவியையும் அளித்துவருகின்ற அமெரிக்கா, மனிதப் பண்பாட்டில் மிகமிகப் பின்னணியில் இருந்துவருகின்றது என்பது வேதனையான விசித்திரமாகும்.

அமெரிக்காவில் விளக்கு இருக்கிறது—ஒளி இல்லை.

நீர் நிறைந்திருக்கிறது —ஆனால் அது நா வறட்சியைத் தணிக்க உதவாது.

இந்த நிலையில்தான் மனித வளர்ச்சிக்குத் தேவைப்படும நவீன சாதனங்கள் அனைத்தும் உடைத்தாயிருக்கின்ற அமெரிக்காவில், கண்டிப்பாக இருந்து தீரவேண்டிய மனிதப் பண்பு, தன்னுயிரைப்போல் பிற உயிரையும் நேசிக்கும் உயர்பண்பு, இல்லாமல் இருந்து வருகின்றது.

அமெரிக்க வெள்ளைக்குடிமக்கள், தங்களுடன் துவக்க முதல் வாழ்ந்து வரும் கருப்பு நிற நீக்ரோ மக்களை சமத்துவமாக நடத்த மறுக்கின்றனர். அந்த நீக்ரோ மக்கள்தான் அமெரிக்காவின் பூர்வ குடிகளாவர்.

சட்டம் சமத்துவத்தைப் பாதுகாக்கின்றது. அமெரிக்க மக்கள் பின்பற்றுவதாகச் சொல்லப்படும் கிறித்துவ மதம் மனித சகோதரத்துவத்தைப் போதிக்கின்றது.

சட்டத்திற்கு முன் அனைவரும் சமம் என்று அமெரிக்க அரசியல் சட்டம் சமத்துவத்தைப் போதித்துக்கொண்டு இருக்கின்றது.

கிறித்துவ மத நம்பிக்கை உடையவர்களெனத் தங்களைக் கூறிக்கொண்டபோதிலும் கூட, இயேசுவின் மனித சகோதரத்துவக் கொள்கையை நடைமுறையில் காட்டவேண்டுமே என்ற நல்லெண்ணம் இல்லாதவர்களாக அமெரிக்க வெள்ளையர்கள் இருந்துவருகின்றனர்.

வெள்ளையர் குழந்தைகளுடன், நீக்ரோக் குழந்தைகள் சேர்ந்து படிப்பதை அமெரிக்க வெள்ளையர்களால் தாங்கிக் கொள்ள முடிவதில்லை.

அதற்காக நீக்ரோக் குழந்தைகளை அடித்து விரட்டுகின்றனர். அதன் பெற்றோர்களைச் சித்திரவதை செய்துகொல்லும் அளவிற்கும், அவர்களை அவ்வூரை விட்டே விரட்டும் அளவிற்கும் அமெரிக்க வெள்ளையர்கள் ஆத்திரம் கொள்ளுகின்றனர்.

இவ்வாறு நிற வேற்றுமை காட்டும் கொடுமை அமெரிக்காவின் வடபகுதியைக் காட்டிலும் தென் பகுதியில்தான் மிகுதியாக இருந்துவருகின்றது. அதுவும் இந்த அணுசக்திக் காலத்திலும் இருந்துவருகின்றது.

உலகில் பின்தள்ளப்பட்டுக் கிடக்கும் மக்களையும், ஒதுக்கப்பட்டுக் கிடக்கும் மக்களையும் கை தூக்கிவிடும் கடமை தனக்கே உண்டு எனக் கூறிக் கொண்டுவரும் அமெரிக்கா, சொந்த நாட்டில் இருந்துவரும் இந்த நிறவேற்றுமைக் கொடுமையைக் களைந்தெறிய மிகமிகத் தீவிரமாகப் பாடுபட முன்வர வேண்டும். அப்பொழுதுதான் அமெரிக்காவின் சமத்துவ அறிவுரையில், பின்தள்ளப்பட்டுள்ள நாட்டு மக்களுக்கு நம்பிக்கை ஏற்படவழிபிறக்கும்.

## 159.9 கோடி கெசம் கைத்தறி உற்பத்தி

1956—57-ம் ஆண்டில் மொத்தம் 159.9 கோடி கெசம் கைத்தறித் துணி உற்பத்தி செய்யப்படுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது என்றும், 1955—56-ம் ஆண்டில் மொத்தம் 147.1 கோடி கெசம் கைத்தறித் துணி உற்பத்தியாயிற்று என்றும் மக்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

## சென்னைக்கு 22,200 டன் அரிசி கிடைத்ததாம்!

புதுடில்லி, ஆக. 23—

நியாய விலைக் கடைகள்மூலம் வழங்கப்படுவதற்காக, 1957 ஏப்ரல்—ஜூலையில் மணங்கு ஒன்றுக்கு ரூ. 16 வீதம் மத்திய சேமிப்பிலிருந்து மொத்தம் 2,67,300 டன் அரிசியை இந்திய சர்க்கார் பல்வேறு மாநிலங்களுக்கும் விநியோகம் செய்தனராம்; அதில் கேரளத்திற்கு 97,000 டன்னும், சென்னைக்கு 22,200 டன்னும் கிடைத்ததாம்.

## குறைந்த ஊதியம் பெறும் என்.ஜி.ஓ.க்கள்

### காசநோய்க் காலத்தில் உதவித் தொகை பெறுவர்

சென்னை, ஆக. 23—

ரூ. 100-ம் அதற்குக் குறைந்தும் சம்பளம் பெறும் (கெசட் பதிவில்லாத) அரசாங்க ஊழியர்கள் காசநோய் சிகிச்சைக்காக, விசேட ஓய்வுக் காலத்தில் இருக்கும்போது அவர்களுக்கு 'உதவிப் படி' அளிக்க அரசாங்கம் அனுமதித்துள்ளது. 'எக்ஸ்ரேஷியா அலவன்ஸ்' என்று சொல்லப்படும் இந்தப் படி, அந்த நோயாளியின் சம்பளத்தில் சரிபாதியாக இருக்கும்; ஆனால் இந்தப் படி, மாதம் ரூ. 50-க்கு மேற்படாது என்றும், ரூ. 25-க்குக் குறையாது என்றும் வரம்பு உண்டு. வேறு எந்தவித ஓய்வு எடுக்கவும் வசதியற்ற ஊழியர்கள் சம்பந்தப்பட்ட மட்டிலுமே இந்தப் படி அனுமதிக்கப்படும்.

## குறைந்த வருமானக்காரர்களுக்கு வீடு வசதித் திட்டம்

### ஆட்சிமன்றங்களும் கடன் வசதி கோரலாம்

சென்னை, ஆக. 23—

குறைந்த வருமானக்காரர்களின் வீட்டு வசதிக்கான இந்திய அரசாங்க திட்டத்தின்கீழ், கடன் உதவி பெற பஞ்சாயத்துக்கள் உள்பட எல்லா உள்ளூர் ஆட்சி மன்றங்களும் மனுச் செய்யலாம்.

வாடகைக்கு விடும் வீடுகள் சம்பந்தமாக மேல்வரம்பு ரூ. 2,800 எனவும், தனிப்பட்ட நபர்களுக்கு விற்கப்படும் வீடுகள் சம்பந்தமாக மேல்வரம்பு ரூ. 8,000 எனவும் அரசாங்கம் வரையறுத்திருக்கிறது.

வீடுகள் கட்டுவதற்கு கொடுத்த கடனைத் திரும்பப்பெற கால அவகாசம் 30 ஆண்டுகள் எனவும், மனை இடங்கள் அபிவிருத்திச் செலவு கடன்களை திரும்பப்பெற அவகாசம் 3 ஆண்டுகள் எனவும் வரையறுக்கப்பட்டுள்ளது.

## 1972 வழக்குகள் விசாரணையிலுள்ளனவாம்

### இந்திய உயர் நீதிமன்றம் பற்றி மக்கள் சபையில் தகவல்

டில்லி, ஆக. 23—

'1957—ஜூலை 31-ந் தேதியுடன் மொத்தம் 1,972 'வழக்குகள் இந்தியாவின் பிரதம நீதிமன்றத்தின் விசாரணையில் உள்ளன' என்று மக்கள் சபையில் உள்நாட்டு அமைச்சர் பந்த் தெரிவித்துள்ளார்.

## வாக்காளர் பட்டியல்

### ஏஜெண்டுமூலமும் பெயர்ப் பதிவு செய்துகொள்ளலாம்

சென்னை, ஆக. 23—

மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின் 23-வது பிரிவின் கீழ், வாக்காளர் பட்டியலில் பெயர்களைச் சேர்ப்பதற்கு, சம்பந்தப்பட்டவர்களின் சார்பில் அவர்களது அதிகாரம் பெற்ற ஏஜெண்டுகளும் மனுச் செய்து கொள்ளலாம் என்று தேர்தல் கமிஷன் தெரிவித்துள்ளது.

## அதுவும் வடநாட்டில்!

புதுடில்லி, ஆக. 23—

மின்சார பாட்டரி, 'செல்'களில் பயன்படுத்தப்படும் துத்தநாக டப்பிகளை உற்பத்தி செய்வதற்காக, துத்தநாகத் தகடு உற்பத்திச்சாலையொன்று கல்கத்தாவில் சென்ற ஆண்டு ஏற்படுத்தப்பட்டதென்றும், அதற்கு மொத்தம் சுமார் ரூ. 28 இலட்சம் செலவாயிற்றென்றும் மாநிலங்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

## நெய்வேலி, குந்தா திட்டங்கள்

### 'நிறைவேறத் தடையிருக்காது'

### திட்டக்குழு துணைத் தலைவர் உறுதியளிக்கிறார்

சென்னை, ஆக. 23—

"சென்னை மாநிலத்தின் தொழில் திட்டங்களில் இரண்டு பகுதிகள் உள்ளன; அவற்றில் ஒன்று நெய்வேலித் திட்டம்; மற்றொன்று குந்தா திட்டம். இவை இரண்டும் திட்டப்படி நிறைவேறுமென்றே எதிர்பார்க்கப்படுகிறது; இவை நிறைவேறாதென்று நினைப்பதற்குக் காரணமெதுவுமில்லை.

"அந்நிய செலாவணியிலுள்ள சங்கடத்தின் விளைவாக, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் வரிசைக் கிரமத்தை மாற்றியமைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. இதனால் சென்னை மாநிலத் திட்டங்கள் பாதிக்கப்படமாட்டா"

இவ்வாறு சென்னை வந்திருக்கும் திட்டக் குழுத் துணைத் தலைவர் வி. டி. கிருஷ்ணமாச்சாரி தெரிவித்திருக்கிறார்.

திட்டத்தின் முக்கிய அம்சங்களை நிறைவேற்றுவது சம்பந்தமாக சென்னை அரசாங்கத்துடன் பேச்சு நடத்துவதற்காக திரு. கிருஷ்ணமாச்சாரி சென்னை வந்துள்ளார்.

## நியாய வாரச் சட்டம் திருத்தப்படும்?

### அதிகாரிகள் ஆராய்கிறார்களாம்!

சென்னை, ஆக. 23—

நியாய வாரச் சட்டத்தில் உள்ள 'ஓட்டை உடைசல்களை'ச் சரிப்படுத்த சென்னை ஆட்சியாளர் இப்பொழுது முன்வந்துள்ளதாகத் தெரிகிறது.

இச்சட்டம் நடைமுறையில் எப்படி அமுலாகியிருக்கிறது என்பதைக் கண்ட பிறகு, அதில் காணப்படும் குறைபாடுகளைத் திருத்துவது சம்பந்தமாக ரெவினியூ இலாகா அதிகாரிகள் பரிசீலனையில் ஈடுபட்டிருக்கின்றனராம்.

சிறு நிலச்சொந்தக்காரர்களுக்கு இச்சட்டத்திலிருந்து விலக்களிக்க வேண்டுமென்றும், இன்னும் பலதரப்பட்ட சாகுபடியாளருக்கும் இச்சட்டத்தின் பலன்கள் கிடைக்கும்படிச் செய்ய வேண்டுமென்றும் சட்டசபையில பல உறுப்பினர்கள் யோசனை தெரிவித்தது நினைவிருக்கலாம்; அந்த யோசனைகளும் பரிசீலிக்கப்பட்டு வருவதாகத் தெரிகிறது.

இத்துறையில் அரசாங்கம் ஒரு முடிவுக்கு வந்தபிறகு அவசியமானால், அக்டோபரில் கூடும் சட்டசபைக் கூட்டத்திலோ அல்லது அதன் பிறகோ, ஒரு திருத்த மசோதா கொண்டுவரப்படலாமாம்.

## நெசவாளர்களுக்கு வீடு கட்டும் திட்டம்

ஆந்திரம், சென்னை, கேரளம், பம்பாய், மைசூர், உத்தரப் பிரதேசம், ஒரிசா ஆகிய மாநிலங்களில் கைத்தறி நெசவாளர்களுக்கு 1,670 வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கான திட்டங்களை சர்க்கார் அனுமதித்தனர் என்றும், இந்தத் திட்டங்களை நிறைவேற்ற மொத்தம் ரூ. 62,03,233 செலவாகுமென்றும், மத்திய சர்க்கார் வகுத்துள்ள மாதிரியொன்றின் அடிப்படையில் இந்தத் திட்டங்கள் மாநில சர்க்கார்களினால் தயாரிக்கப்பட்டன என்றும் மக்கள்சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

## இந்தியப் பேரரசுக்கு இந்த நிலை ஏன்?

### இந்தியாவின் காகிதத் தேவையை ஈடுசெய்ய இயலாது?

புதுடில்லி, ஆக. 22—

நேபா தொழிற்சாலையும், அரசாங்கம் ஏற்படுத்த எண்ணியுள்ள தொழிற்சாலையும், ஆண்டுதோறும் 60,000 டன் வீதம் அதிகப்படியான காகிதம் உற்பத்திச் செய்தாலும் மேலும் தேவையை பூர்த்திசெய்ய 30,000 டன் காகிதம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டிய நிலை இந்தியாவுக்கு உள்ளதாம்.

1961-ல் மொத்தம் 1,20,000 டன் அளவுக்குக் காகிதம் தேவைப்படுமாம். இறக்குமதியை மேலும் அதிகரித்து வெளிநாடுகளை நம்பி இருக்கவேண்டிய நிலை இந்தியாவுக்கு உள்ளதாம்.

காகித உற்பத்திக்குத் தேவைப்படும் கரும்புச் சக்கை இப்போது எரிபொருளாகப் பயன்படுத்தப்படுகிறதாம்.

கரும்புச் சக்கையை காகித உற்பத்திக்கு மட்டும் ஒதுக்கிவிட்டால், எரிபொருளுக்கு மாற்று ஏற்பாடு செய்யவேண்டுமே என்று சங்கடப்படுகிறதாம், இந்தியப் பேரரசு!

## பருத்திக் கொட்டை எண்ணெயும்சேர்க்கப்படும்

புதுடில்லி, ஆக. 23—

தாவர நெய் (வனஸ்பதி) தயாரிப்புக்குத் தேவையான பொருள்களுடன், பருத்திக்கொட்டை எண்ணெயையும் 10 சதவிகிதம் வரை சேர்த்துக் கொள்ளலாம் என்று, மத்திய தொழிலமைச்சர், திரு. எம். எம். ஷா கூறிய யோசனையை, வனஸ்பதி உற்பத்தியாளர்கள் ஏற்றுக்கொண்டிருக்கின்றனர்.

பருத்திக்கொட்டை எண்ணெயை, வனஸ்பதிக்குப் பயன்படுத்துவதன் காரணமாக, வேர்க்கடலை எண்ணெய் அதிகப்படியாக ஏற்றுமதி செய்ய வசதி ஏற்படும் என்றும் அமைச்சர் கூறினார்.

வேர்க்கடலை எண்ணெய்க்குப் பதிலாக, பருத்தி விதை எண்ணெயைப் பயன்படுத்த முற்பட்டால், அதற்கென 30,000 டன் பருத்தி விதை எண்ணெய் உடனடியாக இறக்குமதி மூலம் கிடைக்கச் செய்யமுடியும் என்கிறார்.

## 15,62,553 கைத்தறிகள் பதிவாயினவாம்!

### மக்கள் சபையில் தகவல்

புதுடில்லி, ஆக. 23—

'1957 ஜுன் 30-ந் தேதிவரையில் நாட்டில் மொத்தம் 15,62,553 கைத்தறிகள் பதிவு செய்யப்பட்டிருக்கிறது; மொத்தம் 90,601 கைத்தறிகள் சம்பந்தமான விண்ணப்பங்கள் பதிவு செய்யப்படுவதற்காகப் பரிசீலனையில் இருந்துவருகின்றன' என்று மக்கள் சபையில், வர்த்தக-தொழிலியல் அமைச்சர் தெரிவித்துள்ளார்.

## செலவு வரி மசோதாவில் முக்கிய திருத்தம்

புதுடில்லி, ஆக. 23—

செலவு வரி மசோதாவில் சில முக்கிய மாற்றங்கள் செய்யப்படும் என எதிர்பார்க்கப்படுகிறதாம்.

எல்லா வரிகளும் போக மொத்தம் ஆண்டுக்கு ரூ. 36,000 வருமானம் உடையவர்களுக்கே செலவு வரி விதிக்கப்படும் என்றும், திருமணம், மருத்துவம் போன்ற செலவு இனங்களுக்கும் இவ்வரியிலிருந்து விலக்களிக்கப்படும் என்றும் தெரிகிறது.



# தனிநாடு கோரிக்கை எப்படி பிறந்தது?

## ஆத்திரப்படுவோர் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்

## இந்தித் திணிப்பில் அரசியல் ஆதிக்கம் அச்சுறுத்தலாக வளர்ந்துவிட்டது

### பிடிவாதக் கொள்கையைப் பின்பற்றுவதினால் இந்தி பேசும் மக்களுக்கும் அநீதி இழைக்கப்படுகிறது

## மக்கள் சபையில் ஈ. வெ. கி. சம்பத் தெளிவுரை

"ஒரு மொழி, அதிகமான மக்களால் பேசப்படுகிறது; மற்றொரு மொழி குறைவான மக்களால் பேசப்படுகிறது என்பதால், பின் குறிப்பிட்ட மக்கள் தாழ்வான குடிமக்களாக நடத்தப்படவேண்டும் என்று பொருளா? ஒரு மொழி ஒரு நாட்டின் ஆட்சிமொழியாக வேண்டுமானால், அந்த மொழியைக் கற்றுக்கொள்வதில் உள்ள அனுகூலங்களும, பிரதிகூலங்களும் அந்த நாட்டின் எல்லாக் குடிமக்களுக்கும் சமமானதாக, ஒரே அளவாக இருக்கவேண்டும்.

"இந்தியா ஒரு பல மொழிகள் வழங்கும் இராஜ்யம் (அரசு) மட்டுமல்ல—பல நாடுகளைக் கொண்ட இராஜ்யம் என்பதையும், இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் மறந்துவிடக் கூடாது.

*இவ்வாறு, தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் மக்கள் சபையில், உள்நாட்டு இலாகா மானியக் கோரிக்கைமீது பேசுகையில் குறிப்பிட்டார்; அவரது பேச்சின் முற்பகுதி நேற்றைய இதழில் வெளிவந்துள்ளது; பிற்பகுதி இங்கு தரப்படுகிறது :—*

### தி. மு. கழகத்தின் தனி நாடு கோரிக்கை எப்படிப் பிறந்தது?

"திராவிட முன்னேற்றக் கழகம் குரல் எழுப்பிவருகிற 'திராவிட நாடு அமைக்க வேண்டும்' என்ற கோரிக்கையைப் பற்றிக் கேட்கும்போது காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த கனவான்கள், கோபப்படுகிறார்கள்—ஆத்திரப்படுகிறார்கள்—வசை பாடுகிறார்கள்—பரிகாசம் செய்கிறார்கள்; ஆனால் அவர்கள் இந்தக் கோரிக்கை பிறப்பதற்குக் காரணமாயிருந்த நிலைகளையும், காரணங்களையும் அறிந்துகொள்ள சற்று சிரமப்பட்டு முயற்சிப் பார்களேயானால், இந்தக் கோரிக்கையைத் தவிர்க்கமுடியாததாக ஆக்கியது—ஆச்சாரியார் தலைமையில் சென்னையில் அமைந்த முதல் காங்கிரஸ் மந்திரி சபை, பள்ளிக்கூடங்களில் கட்டாய இந்தியைப் புகுத்தியதுதான் என்பதை அவர்கள் அறியமுடியும்.

### உறங்கிக் கிடந்தவர்களை உலுக்கி எழுப்பியது!

"அந்த நாட்கள்—தமிழ் மொழியும் தமிழர் கலாச்சாரமும் ஒருபுறம் ஆங்கிலத்தாலும், மறுபுறம் சவமொழியாலும் படுமோசமாகத் தாக்கப்பட்டு வந்த காலமாகும். அந்த நாட்களில், தமிழ் மொழியுடன் எத்தனை அதிகமான சவமொழி வார்த்தைகளைச் சேர்க்கமுடியுமோ அவ்வளவு சேர்த்து கலந்து பேசுவதுதான் சிறப்பானது—நாகரீகமானது என்று கருதப்பட்டது அதேபோல, தமிழ் பேசும்போது ஆங்கில வார்த்தைகளையும் முடிந்த அளவு சேர்த்துப் பேசுவதே நவ நாகரீகமானது என்றும் கருதப்பட்டது. உறங்கிக் கிடந்த—இழிவு நிலை நோக்கிச் சென்றுகொண்டிருந்த தமிழர்களைத் தட்டி எழுப்பியது, ஒருவகையில், இந்த இந்திதான் என்று சொல்லவேண்டும்.

### எதிர்பாராத எழுந்த எதிர்ப்பின் விந்தை!

1939-ம் ஆண்டில், ஆச்சாரியாரை முதல்வராகவும், இப்போது அரசாங்க மொழிக் கமிஷன் அறிக்கைக்கு ஒரு கருத்து வேறுபாட்டுக் குறிப்பு எழுதியதின் மூலம், முன்னையப் புகழையும் பெருமையையும் மீறிய—வேறெப்போதும் இல்லாத புகழும் பெருமையும் பெற்றுள்ள டாக்டர் சுப்பராயன், மற்றும் டி. பிரகாசம் போன்றவர்களை உறுப்பினர்களாகவும் கொண்ட காங்கிரஸ் மந்திரிசபையினர், அன்று தேசிய மொழி என்று பிரமாதப் பேசப்பட்ட இந்தி மொழியைப் பிரபலப்படுத்துவதில் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் கொண்டு, அதனைப் பள்ளிக்கூடங்களில் கட்டாய பாடமாக்க முற்பட்டனர். அந்த முயற்சிக்குப் பெரும் எதிர்ப்புக் கிளம்பிற்று; இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி பெற்ற தீவிரமும் வளர்ச்சியும், சர்க்கார் எதிர்பாராதனவாக இருந்தன.

### சிறைப்பட்டனர்—

"கிளர்ச்சியின் தலைவர்களான பெரியார் இராமசாமி, அறிஞர் அண்ணாவும் அன்று தீவிர நாஸ்தீகர்கள் என்று பழி சுமத்தப்பட்டிருந்தாலும், அவரது தலைமையைப் பல சாமியார்களும், தமிழ்ப் பண்டிதர்களும் விருப்பத்தோடு ஏற்றுக்கொண்டு இந்திக்கு எதிராகப் போராடி வெற்றி கண்டார்கள். அப்போது ஆயிரத்திற்கு மேலான ஆண்களும்-பெண்களும் சிறைப்பட்டனர்; தாளமுத்து-நடராசன் என்ற இருவர் சிறையிலேயே மாண்டனர். அவர்களை இன்னும் தமிழ் மக்கள் அனைவரும் போற்றுகின்றனர்.

### தமிழர் கலாச்சாரம் புத்துயிர் பெற்றது!

"இந்த இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சிதான் தமிழ் மொழிக்கும், தமிழர் கலாச்சாரத்திற்கும் புத்துயிர் அளித்தது; மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தது; தமிழர்களின் பெருமைகளும் சிறப்பும் மீண்டும் கண்டறியப்பட்டன; கலப்பில்லாத நல்ல தமிழில் பேசுவோர் பாராட்டப்பட்டனர்; அவர்களுக்குப் பெரும் வரவேற்புக் கிடைத்தது; பழங்காலத்திய சவமொழிமயமான தமிழ் தூக்கி எறியப்பட்டது.

### மலர்ந்த இலட்சியம் நீண்ட வரலாறுகும்

"உலகெங்கிலும் இந்த மொழி வழி மறுமலர்ச்சி, தேசிய எழுச்சியின் தோழனாக விளங்குகிறது என்ற உண்மையை யாரும் மறுக்கமாட்டார்கள்.

"அதன் பிறகுதான், 'தனித் தமிழ் நாடு' என்ற கருத்துத் தோன்றியது — வளர்ந்தது; 'தமிழ் நாடு தமிழருக்கே' என்ற முழக்கம், தமிழகமெங்கணும் எதிரொலித்தது.

"இந்தக் கருத்து பின்னர் எப்படி திராவிட நாடு என்ற இலட்சியமாக மலர்ந்தது என்பது நீண்டதோர் வரலாறுகும்.

### மொழித் தகராறு அல்ல—கலாச்சார போராட்டமாகும்

"இவற்றை எல்லாம் நான், இங்கு கூறுவதற்குக் காரணம், ஒரு மொழியை, வேறொரு மொழி பேசும் மக்கள்மீது திணிப்பதற்கு முயற்சிக்கப்படும்போது அது, பலர் கருதுவதைப்போல ஒரு மொழித் தகராறு அல்ல—மாறாக, அது ஒரு பெரும் கலாச்சாரப் போராட்டமாகி விடுகிறது என்ற உண்மையை வற்புறுத்துவதற்குத்தான்.

### அச்சுறுத்தலாக வளர்ந்த கொடுமை

"இந்திப் பிரச்சினை இன்று ஒரு சாதாரண தகராறாக இல்லை; மாறாக, ஒரு பகுதியினர், மற்றவர்மீது அரசியல் ஆதிக்கமும், கொடுமையும் புரியும் அச்சுறுத்தலாக வளர்ந்துவிட்டது. நாளும் வளரும் இந்த அச்சுறுத்தலும், அச்சமும், ஒழிக்கப்பட்டாக வேண்டும்.

"'இந்தி மட்டுமல்ல—அரசியல் சட்டத்தின் எட்டாவது ஷெட்யூலில் கண்டுள்ள மொழிகள் அனைத்தும் நமது தேசிய மொழிகளே' என்று, இந்தியாவில் வாழும் மக்கள் அனைவரும் வெகுவாகத் திருப்திப்படும் வகையில், நமது பிரதம மந்திரி சின்னாட்களுக்குமுன் குறிப்பிட்டிருந்தார்.

### தகுந்த விளக்கம் தருவதற்கு முன்வருக!

"ஆனால், சமீபகாலமாக உயர்ந்த பதவிகளிலிருக்கும் — நான் மிக வருந்துகிறேன் — மிக உயர்ந்த பதவிகளிலிருக்கும் சிலர், 'இந்தியாவின் தேசிய மொழி இந்தி'எனத் திரும்பத் திரும்பச் சொல்லித் திரிகிறார்கள்.

"உயர்மட்டத்தில் எழும் இந்த முரண்பாடு, மிகவும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டியதாயும், அடிப்படையான ஒன்றாகவும் இருக்கிறது; மேலும், இந்த முரண்பாடு குறித்து சர்க்கார் தகுந்த விளக்கமும் காரணமும் தந்தாகவேண்டும்.

"இந்தி மட்டுமா—அல்லது, எல்லா மொழிகளுமா நமது தேசிய மொழிகள் என்பதுபற்றி சர்க்கார் தங்கள் நிலையை—கொள்கையைத் தெளிவாகத் தெரிவிக்க வேண்டும்; ஏனெனில், இந்த இரண்டு கருத்துக்களுக்கும் இடையில் உள்ள வேறுபாடு, பல நாடுகளைக் கொண்ட இந்த உபகண்டத்து மக்களுக்கு மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

### இலங்கையைப் பாரீர்!

"இந்தச் சந்தர்ப்பத்தில், இலங்கை சர்க்காரின் 'சிங்களம் மட்டுமே' என்ற கொள்கை வழியான முடிவைத் தொடர்ந்து, அங்கு அண்மையில் தோன்றிய சூழ்நிலைகளை

(4-ம் பக்கம் பார்க்க)

'தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில், உலகில் எந்தச் சக்தியும் இந்தி ஏகாதிபத்தியத்திற்கு எங்களைப் பணியவைத்துவிட முடியாது' என்று மக்கள் சபையில், தி. மு. கழகச் சார்பில் குரலெழுப்பினர், தோழர் ஈ. வெ. கி. சம்பத்

## டில்லியை எதிர்த்து அறப்போர்!

### அசாம் மக்கள் எழுச்சி

காட்டி, ஆக. 23—

எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை ஏற்படுத்தும் பிரச்சினையில், இந்திய அரசாங்கத்தின் எதேச்சாதிகாரப் போக்கிற்கு எதிராக அசாம் மக்கள் அமைதியான முறையில் அறப்போர் துவக்கியுள்ளனர். நான்கு நாட்களாகப் போராட்டம் வெற்றிகரமாக நடைபெற்றுவருகிறது.

இதுவரை மொத்தம் 109 அறப்போர்த் தொண்டர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

## 135 மைல் நீளமுள்ள தமிழக இரயில் பாதை

### விலைக்கு வாங்கிக்கொள்ள இந்திய சர்க்கார் முடிவு?

புதுடில்லி, ஆக. 23—

தஞ்சை மாவட்ட ஆட்சிமன்றத்திற்குரிய மாயவரம்—அறந்தாங்கி இரயில் பாதை (131 மைல் நீளம்) யையும், சேலம் மாவட்ட ஆட்சி மன்றத்தைச் சேர்ந்த சேலம்—சூரமங்கலம் (4 மைல் நீளம்) இரயில் பாதையையும் மத்திய அரசாங்கம் விலை கொடுத்து வாங்கிக்கொள்ளும் என்று தெரிய வருகிறது.

# ஈ.வெ.கி.சம்பத் தெளிவுரை

## பக்தவத்சலனாரின் அறிவுப் பொறிகள் !

"சிலர் (தி. மு. கழகத்தினர்) நாட்டை பிரிக்க வேண்டும் என்கிறார்கள். நாட்டைப் பிரித்தால் நாட்டின் கதி என்ன ஆவது? 'தனி நாடு பிரித்துக் கொடு' என்பது 'மைனர் விளையாட்டு' விளையாடுவதுபோல ஆகும்.

"மைனர் பிள்ளை ஒருவன் தந்தையிடம் போய், 'எனக்கு சொத்தை பிரித்துக் கொடு' என்றுகேட்பான் மேலும், நினைத்ததை யெல்லாம் கேட்பான்; அவன் கேட்டபடி எல்லாம் கொடுத்துவிட்டால் கெட்டு ஒழித்து விடுவான், பின்னுல் அதுபற்றி வருத்தப்படுவான். 'தனி நாடு கொடு' என்று கேட்பவர்கள் நிலையும் இப்படித்தான் இருக்கும்.

★

"சென்னை நகரம் கிடைக்க வேண்டும் என்று நாம் பாடுபட வில்லையா? எனவே, 'சென்னை' என்ற பெயரில் வெறுப்பு ஏன்?

"வெளிநாடுகளில், 'சென்னை' என்று கூறி கடன் கேட்டால் மதித்துக் கொடுப்பார்கள்; அதை விட்டு 'தமிழ்நாடு' என்று கூறினும் எப்படித் தருவார்கள்?"

(3-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

இந்தச் சர்க்கார் ஆராய்ந்து அறிவது நல்லதாகும்.

### அநீதியும் தீங்கும் இழைக்கிறார்கள் !

"இந்தி வழங்காத மக்கள் மீது இந்தியைத் திணிப்பது என்ற தங்களின் கொள்கையைப் பிடிவாதமாகப் பின்பற்றுவதின் மூலம் இந்தச் சர்க்கார், இந்தி பேசாத மக்களுக்கு அநீதி இழைக்கிறார்கள் என்பதோடு இந்தி பேசும் மக்களுக்கும் பெரும் தீங்கு இழைக்கிறார்கள் என நான் குறிப்பிட விரும்புகிறேன்.

### இட்லரின் குரல் இங்கு எதிரொலிக்க வேண்டாம்!

"உலகத்திலேயே தங்களின் இனம் கலாச்சாரம், மொழி இவைதான் மிக உயர்ந்தது என்றும், உலகத்தையே தாங்கள்தான் ஆளப் பிறந்தவர்கள் என்றும், மற்றைய உலகம் முழுவதும் தங்களுக்கு அடிமைகளாகச் சேவகம் புரியவே படைக்கப்பட்டது என்றும், ஜெர்மானியர்களுக்கு உரத்த குரலில் ஹிட்லர் போதித்தான்; ஆனால், எவ்வளவு பெரும் மதியீனமான செயலை—தவறைச் செய்வதற்கு தாங்கள் ஆளாக்கப்பட்டார்கள் என்பதை, உண்மையில் இப்போது ஜெர்மன் மக்கள் உணரத்தான் செய்கின்றனர். அந்தத் துன்பியல் இங்கும் நிகழாமலிருக்கட்டும்.

### எங்களைப் பணியவைக்க இயலாது !

"எங்கள் தமிழ் - நாட்டைப் பொறுத்தவரையில், உலகில் எந்தச் சக்தியும் இச்சகம் பேசியோ, நிர்ப்பந்தம் செய்தோ இந்தி ஏகாதிபத்தியத்திற்கு எங்களைப் பணியவைத்துவிட முடியாது என்பதை மிகப் பணிவன்புடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்."

## காட்பாடியில் வெடிவிபத்து

### ஏழு பேர் பலியாயினர்

சென்னை, ஆக. 24—

காட்பாடி புகைவண்டி நிலையத்தில் 21-ந் தேதியன்று ஏற்பட்ட வெடி விபத்தில் இறந்தவர்கள் மொத்தம் 6 பேர் என்றும், மற்றும் ஒரு பெண் உட்பட 11 பேருக்குக் காயமேற்பட்டு மருத்துவ விடுதியில் சேர்க்கப்பட்டுள்ளனரென்றும் அவர்களில் ஏழு பேர் நிலைமை கவலைக்கிடமாக இருந்ததென்றும், அவர்களில் நாகம்மாள் என்னும் 40 வயது மாது இறந்து விட்டதாகவும் கூறப்பட்டிருக்கிறது.

இந்த விபத்தின் காரணமாக ஏற்பட்டுள்ள சேதம் ரூ. 50,000 மதிப்புள்ளது என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

# சிங்கப்பூரில் கம்யூனிஸ்டுகள் சதி?

## ஆட்சியைக் கைப்பற்ற முயற்சிப்பதாக சர்க்கார் வெள்ளை அறிக்கை

சிங்கப்பூர், ஆக. 23—

சிங்கப்பூரில் பலாத்காரமாக, ஆட்சியைக் கைப்பற்ற கம்யூனிஸ்டுகள் செய்துவரும் சதி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாக சிங்கப்பூர் சர்க்கார், இன்று வெளியிட்டுள்ள வெள்ளை அறிக்கை ஒன்றில் குறிப்பிட்டிருக்கின்றனர்.

இந்த வெள்ளை அறிக்கைபற்றி விளக்கம்தந்த அதிகாரி ஒருவர், மலேயா காடுகளில் சண்டையிட்டுக் கொண்டிருக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும், சிங்கப்பூர் கம்யூனிஸ்டுகளுக்கும் நேரடித் தொடர்பு இருப்பதாகக் கூறியிருக்கிறார்.

சிங்கப்பூரைக் கைப்பற்ற கம்யூனிஸ்டுகள் செய்துவரும் சதி, கடந்த சில நாட்களில் வெட்ட வெளிச்சமாகியுள்ளதாகவும் அந்த அதிகாரி கூறியுள்ளார்.

சட்டவிரோதமாக்கப்பட்டுள்ள மலேயா கம்யூனிஸ்டுக் கட்சியினர், பி. ஏ. பி. என்ற மக்கள் நடவடிக்கைக் கட்சியில் செல்வாக்குப் பெற்றுவருவதாகவும் அவர் கூறியிருக்கிறார்.

"மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அமைந்துள்ள இந்த சர்க்காருக்கு, ஒரு சர்வாதிகார ஆட்சியை நிறுவ சதிவேலையில் ஈடுபடும் கம்யூனிஸ்டுகளின் முயற்சிகளை முறியடிக்கவேண்டிய பின்வாங்க முடியாத கடமை இருக்கிறது" என்று அறிக்கை கூறுகிறது.

அந்த அறிக்கையில், மலேயா கம்யூனிஸ்டுகள் தாங்கள் ஒரு ஐக்கிய முன்னணி அமைத்து ஒரு பெரும் புரட்சியில் ஈடுபடும்நாளை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாகவும், இவர்களின் நடவடிக்கைகளை முறியடிக்காமல் வளரவிட்டால், இரத்தக்களரியும் கலகமும் ஏற்படும் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இந்த அறிக்கை வெளியிடப்படுவதற்குச் சிலமணி நேரத்திற்கு முன், சிங்கப்பூர் போலீசார், இடதுசாரிக் கட்சிகளைச் சேர்ந்த பலரைச் சோதித்து சுமார் 35 பேர்களைக் கைது செய்திருக்கின்றனர் என்றும் தெரியவருகிறது.

### சி. பி. சிற்றரசு— எஸ். எம். அண்ணாமலைக்கு பஞ்சாயத்து வரவேற்பு

25—8—57 மாலை வருகைதரவிருக்கும் தோழர்கள் சி. பி. சிற்றரசு, களம்பூர் எஸ். எம். அண்ணாமலை எம்.எல்.ஏ. ஆகிய இருவருக்கும், ஆரணி வட்டம் தென்னூர் ஊராண்மைக் கழகச் சார்பில் வரவேற்பு அளிக்கப்படும்.

## கள்ளக்குறிச்சி தேர்தல் வழக்கு

சென்னை, ஆக. 23—

கள்ளக்குறிச்சி தொகுதியிலிருந்து சென்னை சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட தி. மு. க. அபேட்சகர்களான தோழர்கள் சி. நடராசன், எம். ஆனந்தன் ஆகியோரின் ஓட்டுகளை மீண்டும் எண்ணவேண்டுமென நாகை தேர்தல் வழக்குமன்ற (டிரிப்யூனல்) நீதிபதி உத்தரவிட்டது தினைவிருக்கலாம்.

மீண்டும் ஓட்டுகள் எண்ணப்பட வேண்டுமென்ற இவ்வுத்தரவை ரத்து செய்யவேண்டுமெனக் கோரி தோழர்கள் நடராசன், ஆனந்தன் சார்பில் சென்னை உயர் நீதிமன்றத்தில் ஒரு 'ரிட்' மனு தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது. டிரிபியூனல் உத்தரவு சட்டவிரோதமானது என்றும், நியாயமற்றது என்றும் மனுவில் கூறப்பட்டுள்ளது.

நீதிபதி திரு. இராசகோபாலன் மனுவை ஏற்றுக்கொண்டு, ஓட்டு எண்ணிக்கையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்கு உத்தரவிட்டார்.

### டி. கே. எஸ். குழுவினருக்கு பாராட்டு

★

25—8—57 காலை 9-30 மணிக்கு, சென்னை-மயிலாப்பூர், ரசிக்ரஞ்சனி சபா மண்டபத்தில், மலாயா சென்று கலைப் பணியாற்றி வந்துள்ள டி. கே. எஸ். குழுவினருக்கு தென்னிந்திய நடிகர் சங்கத்தின் சார்பில் ஓர் பாராட்டு விழா நடத்தப்படும். டாக்டர் யூ. கிருஷ்ணராவ் தலைமை வகிப்பார்; டாக்டர் மு. வரதராசனார், தோழியர் சௌந்தரம் கைலாசம் ஆகியோர் பாராட்டுரை வழங்குவர்.

### சென்னை 47-வது வட்ட தி. மு. க. பொது உறுப்பினர் கூட்டம்

25-8-57 பிற்பகல் 2 மணிக்கு சென்னை 47-வது வட்டம், கடை வீதி, எண் 95 இல்லத்தில் தோழர் சோ. செங்குட்டுவன் தலைமையில் மேற்படி வட்ட தி. மு. க. பொது உறுப்பினர் கூட்டம் நடைபெறும். அவ்வமயம் புதிய நிர்வாகிகள் தேர்தல் நடைபெறும்.

### பார்த்திபனூர் இளைஞர் மன்றப் பொதுக்கூட்டம்

27—8—57 மாலை 6 மணிக்கு, பார்த்திபனூர் இளைஞர் மன்றச் சார்பில் தோழர் எஸ். ஜே. அப்துல்காதர் அவர்கள் தலைமையில் காந்தி திடலில் நடைபெறவிருக்கும் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் எஸ். முத்து, கே. எஸ். சந்தானம், எஸ். நித்தியானந்தம் ஆகியோர் பேசுவர். வி. சேது இன்னிசை வழங்குவார்.

## கே. ஏ. அருணாசலம் மறைவு

தோழர் கே. ஏ. மதியழகன் அவர்களின் மூத்த சகோதரர் திரு. கே. ஏ. அருணாசலம் அவர்கள் கடந்த 19—8—57 அன்று தம் சொந்த ஊரான கணியூரில் இயற்கை எய்தினார் என்ற துயரச் செய்தியை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

அண்ணனைப் பிரிந்து ஆற்றொணாத் துயரத்திலாழ்ந்திருக்கும் நண்பர்கள் மதியழகன் அவர்கட்கும், அவரது மற்றொரு சகோதரர் கே. ஏ. முருகேசன் அவர்கட்கும், மற்றும் குடும்பத்தாருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபமும், ஆறுதலும் உரித்தாகுக. (ஆ-ர்)

## கழகக் கூட்டங்கள்

★

**பண்ணுருட்டி :**

தண்டபாணி டாக்கீஸ் திடலில்
25—8—57 மாலை 5 மணிக்கு
தலைவர் : க. கோவிந்தன்
பேசுவோர் :
காஞ்சி. கல்யாணசுந்தரம்
வெ. கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ.
வி. டி. அரசு

★

**சேலம்— அம்மாப்பேட்டை :**

செல்வம் சதுக்கத்தில்
25—8—57 மாலை 6½ மணிக்கு
தலைவர் : என். கே. ஆதிமூலம்
பேசுவோர் :
ஏ.வி.பி.ஆசைத்தம்பிஎம்.எல்.ஏ.
ஈ. ஆர். கிருஷ்ணன்
வி. சிவப்பிரகாசம்
கே. பி. நஞ்சப்பன்
கே. எஸ். மணி
சிற்றளி-சுப்பிரமணியம்

★

**திண்டுக்கல் :**

சோலை ஹால் திடலில்
25—8—57 மாலை 6 மணிக்கு
தலைவர் : க. வேலாயுதனார்
பேசுவோர் :
மு. இராமநாதன்
என். முத்து
ஏ. சுப்பையா
முகதா
இன்னிசை : எம் வி. துரையப்பா

★

**உதயமார்த்தாண்டபுரம்:**

(தில்லைவிளாகம் புகைவண்டி நிலையத்திற்கருகில்)
26--8--57 மாலை 5-30 மணிக்கு
தலைவர் :
வி. எஸ். எம். வேம்பையா
பேசுவோர் :
என். வி. நடராசன்
என். எஸ். இளங்கோ
ந. தர்மலிங்கம்
ம. அரிகரன்
ம. அம்பிகாபதி
இன்னிசை : மன்னார்குடி சுந்தரேசன்

★

**தென்காசி :**

இலசபதி மைதானத்தில்
27—8—57 இரவு 9 மணிக்கு
பேசுவோர் :
இரா. நெடுஞ்செழியன்
இரத்தினவேல்பாண்டியன்

### சென்னை 36-வது வட்ட தி. மு. க. செயற் குழுக் கூட்டம் :

25—8—57 காலை 10 மணிக்கு, வடக்குத் தியாகராயநகர் இரயில்வே பார்டர் ரோடிலுள்ள மேற்படி கழகப் பணிமனையில் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். வரவு-செலவுக் கணக்கு ஆய்வுக்கு வரும்.

### திருவொற்றியூர் தி. மு. கழகப் பொது உறுப்பினர்கள் கூட்டம் :

25—8—57 காலை 9 மணிக்கு, மேற்படி கழகப் பணிமனையில் தோழர் கோ. செங்குட்டுவன் தலைமையில் பொது உறுப்பினர்கள் கூட்டம் நடைபெறும். அவ்வமயம் துணைச் செயலாளர் தேர்தல் நடைபெறும்.

### சென்னை 14-வது வட்ட தி. மு. க. பொது உறுப்பினர் கூட்டம்

25-8-57 காலை 9 மணியளவில் பந்தர் தெரு, எண். 43 இல்லத்தில் மேற்படி வட்ட தி. மு. க. பொது உறுப்பினர் கூட்டம் நடைபெறும். வரவு-செலவு கணக்கும், திராவிட நாடு பிரிவினை வாரம் கொண்டாடுதலும் ஆய்வுக்கு வரும்

### மாயூரம் நகர தி. மு. க. செயற்குழுக் கூட்டம்

26—8—57 இரவு 8½ மணிக்கு இலக்குமி படப் பிடிப்பு நிலையத்தில் மாயூரம் நகர் தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். அவ்வமயம் பல முக்கிய பிரச்சினைகள் ஆய்வுக்கு வரும்.

## 'நம் நாடு' இதழ் விற்பனையாளர் தேவை

கீழ்க்கண்ட ஊர்களில் 'நம் நாடு' இதழை விற்பனை செய்வதற்கு விற்பனையாளர்கள் தேவை; நிபந்தனைகளுக்கு விண்ணப்பித்துக் கொள்க :

பூதலூர்
அறந்தாங்கி
திண்ணனூர்
மதுராந்தகம்
கல்லிடைக்குறிச்சி
இராஜசிங்கமங்கலம்.
பேளூர் (சேலம் மாவட்டம்)
ஆலமரத்துப்பட்டி (கரூர் வட்டம்)

—நிர்வாகி : 'நம் நாடு'

### மாயூரம் திருவள்ளுவர் படிப்பக 3-வது ஆண்டு விழா

25—8—57 மாலை 4 மணிக்கு மாயூரம் கூறைநாடு, கள்ளக்குறிச்சியிலுள்ள மேற்படி படிப்பகத்தின் ஆண்டு விழா தோழர் இரத்தினம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் என். கிட்டப்பா, கே. எஸ். சௌந்தரராசன், வி. ஏ, பாண்டியன் ஆகியோர் பேசுவர்.

### தோட்டப்பாளையம் திருவள்ளுவர்மன்ற ஆண்டுவிழா

25—8—57 மாலை 6-30 மணிக்கு வேலூர் தோட்டப்பாளையம் திருவள்ளுவர்மன்ற ஆண்டு விழாவும் வள்ளுவர் விழாவும் தோழர் மா. பா. சாரதி எம். எல். ஏ., தலைமையில் நடைபெறும். தோழர்கள் கா. அப்பாதுரை, வி. முனுசாமி ஆகியோர் பேசுவர்.

### சென்னை 45-வது வட்டம் அண்ணா படிப்பக நிர்வாகிகள் தேர்தல்

25-8-57 காலை 9 மணிக்கு சென்னை (45-வது வட்டம்) அண்ணா படிப்பகத்தின் நிர்வாகிகள் தேர்தல் தோழர் டி. தம்பிதுரை அவர்கள் தலைமையில் நடைபெறும். தேர்தல் முடிந்ததும் படிப்பகப் பணிமனையை தோழர் பெ. இரத்தினவேலு திறந்துவைப்பார். தோழர் கோ. இளவரசு கழகக் கொடியை ஏற்றிவைப்பார்.

### சென்னை—மயிலை சௌந்திரபாண்டியனார் படிப்பகச் செயற்குழு

24—8—57 இரவு 9 மணிக்கு சென்னை—மயிலை சௌந்திரபாண்டியனார் படிப்பகத்தின் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். வரவு-செலவு மற்றும் சில பிரச்சினைகள் ஆய்வுக்குவரும்.

### சொற்பயிற்சிக் கூட்டங்கள்

25—8—57 ஞாயிறு காலை 10-30 மணிக்கு சென்னை—புரசை 17, ஆதியப்ப முதலித் தெரு மூத்தமிழ் மன்ற இல்லத்தில் சொற்பயிற்சிக் கூட்டம் நடைபெறும்; தோழர் வே. பக்தவத்சலம் தலைமையில், 'சமூகத் தொண்டு' என்பதுபற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

* * *

25—8—57 காலை 10 மணிக்கு சென்னை, பிராட்வே, 4/88 எ. எண்ணுள்ள இல்லம் 11-வது வட்ட தி. மு. க. பணிமனையில் தோழர் அழ. திராவிடப்பித்தன் தலைமையில் 'இந்தித் திணிப்புக் குழு' என்னும் பொருள் குறித்துப் பலர் பேசுவர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் ஆசிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

